Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 353

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர். மஹாவித்வான்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி--ஏழ்பாரும்
உய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பிங்களஹு ஐப்பசிமீ நவம்பர்மீ

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸ்ரீகாஞ்சீ நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடனம் (பிங்கள ஸூ 1977)

ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதியின் திருமுன்பே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் **நம்பிள்ளைக்கு** நாளது கார்த்திகைமீ 1உ (**16-11-77**) புதன்கிழமை உத்தராடநக்ஷத்திரத்தில் திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகைமீ 10உ (**25—12—77**) வெள்ளிக்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்திரத்திலே சாற்றுமுறையாகும். பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டுவேளைகளிலும திவ்யப்ரபந்தஸேவை கோஷ்டிகளும் ததீயாராதனமும் விசேஷ வைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும். ஆஸ்திகர்கள் அனைவரும்வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்கவேணும். இம்மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்து வரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தலவசதி முதலிய ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படும். ஸ்ரீ வைஷ்ணவ பக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக்கூடிய மஹோத்ஸவமிது.

சாத்துமுறையன்று ஸ்ரீ யதோக்தகாரி எம்பெருமான் புறப்பாடு கண்டருளி நம்பிள்ளை ஸன்னிதியிலெழுந்தருளியிருந்து நடைபெறும். இரண்டாயிரம் ரூபாய் செலவில் விசேஷ வைபவங்களுடன் நடைபெற்றுவருகின்ற இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து யதாசக்தி பொருளுதவி புரிந்து ஆசார்ய ஸார்வபௌமருடைய இம்மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இங்ஙனம்,

P. B ANNANGARACHARYA,
Founder, Sri Nampillai Sannidhi

சின்ன காஞ்சீபுரம்,
1—11—77.

# ஸ்ரீ ராமாநுஜன் 353



ஆசிரியர்:
மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

தொகுதி 30 | பிங்களஷூ ஐப்பசிமீ **10—11—1977** | பகுதி—5


### பிங்களவத்ஸர மங்கள வார்த்தைகளில்

## எம்பெருமானும் எம்பெருமானாரும்

*ஆழ்வார்கள் தாங்களவதரித்த நாள்களிலும், வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர்!—ஏழ்பாருமுய்ய எதிராசருதித்தருளும் சித்திரையில் செய்ய திருவாதிரை* என்றும் *நாற்றிசையுங்கொண்டாடும் நாள்* என்றும் நம் மணவாள மாமுனிகள் கொண்டாடின நன்னாளையொட்டி எம்பெருமானார்குணாநுபவம் மீண்டும்செய்வோமிங்கு. எம்பெருமானாரைப்பற்றி மூவகைப்பட்ட உல்லேகங்களைச் செய்வர் பெரியோர். (1) எம்பெருமானார் எம்பெருமானைக் காட்டிலும் தாழ்ந்தவர் என்பது முதல் உல்லேகம். (2) எம்பெருமானைக்காட்டிலும் மேம்பட்டவர் என்பது இரண்டாவதான உல்லேகம். (3) ஏற்றத்தாழ்வின்றியே எம்பெருமானும் எம்பெருமானாரும் ஸமமானவர்களே யென்பது மூன்றாவதான உல்லேகம். இம்மூன்று உல்லேகங்களுக்குமுண்டான உபபத்திகளை இங்கு விவரிப்போம்.

1. எம்பெருமானார் எம்பெருமானைக்காட்டிலும் தாழ்ந்தவர் என்பது சாஸ்த்ரீய ஸரணியில் பொருந்துவதே. ஸர்வசேஷியான எம்பெருமானுக்கு அஸ்மதாதி நிர்விசேஷமாக ஸ்வாமி தாமும் சேஷப்பட்டவரேயன்றோ. சரணாகதி கத்யத்தில் "தாஸபூதம், சரணாகதோஸ்மி தவாஸ்மி தாஸ இதி வக்தாரம் மாம் தாரய." இத்யாதி ஸ்ரீஸூக்திகளாலே எம்பெருமான் திறத்தில் தம்முடைய தாஸபாவத்தை உள்ளபடி அநுஸந்தித்திருக்கிற ஸ்வாமி, எம்பெருமானைக்காட்டிலும் தாழ்ந்தவர் என்றால் இதை விவரிக்க ஆவச்யகதையுண்டோ?

2. எம்பெருமானைக் காட்டிலும் மேம்பட்டவர் எம்பெருமானார் —என்றது எங்ஙனே யென்னில்; இஃது இராமாநுச நூற்றந்தாதியில் பல பாசுரங்களாற் பேசப்பட்டுள்ளது; இங்கு இரண்டு பாசுரங்களைக் கொண்டு மட்டும் இதனை மூதலிப்போம்.

அதில் நாற்பத்தோராவது பாசுரம் *மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து, எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலுங் காணகில்லா வுலகோர்களெல்லாம் அண்ணலிராமானுசன் வந்து தோன்றியவப் பொழுதே நண்ணரு ஞானந் தலைக்கொண்டு. நாரணற் காயினரே* என்பது. எம்பெருமான் பல பல யோனிகளிற் பலவகைப் பிறவி பிறந்து கண்காண வந்து நின்று உபதேசங்களாலே ஸ்வரூபத்தைக் காட்டிக் கொடுத்த விடத்திலும் யாரும் அவனைப் பொருள் படுத்தவில்லை; *அவஜாநந்தி மாம் மூடா:* [என்னை மூடர்கள் அவமானப்படுத்துகிறார்கள்] என்று அவன் தானே சொல்லிக்கொண்டு வருந்த வேண்டியதாயிற்று. ஆகவே எம்பெருமானுடைய அவதாரம் ஸம்ஸாரிகளின் உஜ்ஜீவனத்திற்கு உறுப்பாகவில்லை. எம்பெருமானாருடைய திருவவதாரமோவென்னில், விரைவில் பயன்பெற்றது. இவர் அப்பெருமானைப்போலே 'என்னையே தொழுங்கள்; என் திருவடிகளையே தஞ்சமாகக் கொள்ளுங்கள்' என்னாமல் ''அவனையே தொழுங்கள்; அவனது திருவடிகளே உங்களுக்குத் தஞ்சம்'' என்றருளிச் செய்து போந்தவராதலால் ''அவஜாநந்தி மாம் மூடா:'' என்றும் ''ந மாம் துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா:'' என்றும் வருந்திச் சொல்லவேண்டிய ஸந்தர்ப்பம் ஸ்வாமிக்குச் சிறிதுமுண்டாகவில்லை. இதனால் எம்பெருமானைக் காட்டிலும் எம்பெருமானார் மேம்பட்டவரென்னப் பொருந்தும்.

நூற்றந்தாதியில் அறுபத்தாறாவது பாசுரம் 'ஞானங் கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கு வானங் கொடுப்பது மாதவன், வல்வினையேன் மனத்திலினைங் கடிந்தவிராமானுசன் தன்னை யெய்தினர்க்கு அத்தானங் கொடுப்பது, தன் தகவென்னுஞ் சரண் கொடுத்தே* என்பது. இப்பாசுரத்தாலும் ஸ்வாமிக்கு ஒரு மேம்பாடு தெரிவிக்கப்படுகிறது. அடியார்களுக்கு மோக்ஷமளிக்கிற அதிகாரம் எம்பெருமானுக்குமுண்டு எம்பெருமானார்க்குமுண்டு; எம்பெருமானளிப்பது மிகவும் சிரமப்படுத்தியே; எம்பெருமானாரளிப்பது, கேவலம் தம்முடைய திருவருளாலே யென்கிறது இதில். ஞானமானது நன்றாகக் கனிந்து அது பக்தி, பரபக்தி, பரமபக்தி என்னும்படியான பரிபாக அவஸ்தைகளையடைந்து அதனால் இந்தஸம்ஸாரத்தில் க்ஷணகாலமிருப்பதும் அஸஹ்யமாய் ஆழ்வார்களைப் போலத் துடிப்பவர்களுக்குத்தான் எம்பெருமான் முக்தியளிப்பது. எம்பெருமானாரோவென்னில் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யராகையாலே அடியார்கள் பக்கலில் எவ்விதமான கிலேசத்தையும் எதிர்பாராமல் தமது திருவருளைக் கொண்டே அவர்களைக் கரையேற்றுபவராயிற்று. இச்சிறப்பினாலும் எம்பெருமானார்க்குள்ள மேம்பாடு அறிய வெளிது.

3. *ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா* என்றும் *பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து* என்றுமுள்ள ப்ரமாணங்கள் ஸ்ரீமந் நாராயணனே ஆசார்ய ரூபேண அவதரித்து அருள் செய்வதாகச் சொல்லுகையாலே ஸாம்ய நிர்வாஹத்திற்கும் குறையில்லை. ஆனாலும், கர்மாநுகுணமாக லீலையிலும் விநியோகம் கொள்ளக் கடவனாய், ஸ்வ சரண கமல ஸமாச்ரயண தசையில் புருஷகாரம் வேண்டும்படியாயிருக்கும் எம்பெருமானைப் போலன்றியே, ஸ்வரூபாநுரூபமாகவே விநியோகம் கொள்ளுமவராய், ஸ்வாச்ரயணத்தில் புருஷகார நிரபேக்ஷராயுமிருக்கின்ற ஆசார்ய ஸார்வபௌமரே மேம்பட்டவரென்பதுதான் மிகச் சிறந்த ஸித்தாந்தம். ... ... *

# தார்மிக ஹிந்துவில் கண்டதொன்று

தார்மிக ஹிந்துவென்னும் மாதாந்தப் பத்திரிகையில் நேற்றைப் புரட்டாசிமாத இதழில் முகப்பில் ஆசிரியர் ஸ்ரீமதுபயவே. து. க. ஜகந்நாதாசாரியர் ஸ்வாமி எழுதியுள்ள நீண்டதோர் கட்டுரையில் முதல் பாராவைமட்டும் ஈண்டு அநுவதித்துச் சில வார்த்தைகள் விஜ்ஞாபிக்க விரும்புகிறோம்.

## "காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசார்யர் ஸ்வாமியின் கடிதம்

சென்ற இதழில் '(தென்கலை) தத்வார்த்த நிரூபணம்' என்ற தலைப்பில் எழுதிய விமர்சத்தைப்பற்றி காஞ்சீபுரம் ஸ்ரீ ஜகதாசார்ய மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசார்யர் ஸ்வாமி, மிக அன்புடன் ஒரு சிறிய கடிதத்தை நமக்கு எழுதியிருக்கிறார். அதில் இந்த மறுப்பு நூலாகிய " தத்வார்த்த நிரூபணம் " ஸ்ரீ ராமாநுஜன் அச்சிடப்படும் அச்சகத்திலேயே அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளதாக நாம் எழுதியிருப்பது தவறு என்பதை நமக்கு அவர் அதில் சுட்டிக் காண்பித்திருக்கிறார். இது நியாயம்தான். இதற்காக நாம் அவருக்கு நம் நன்றியை மிக வணக்கத்துடன் தெரிவித்துக்கொள்ளுகின்றோம். ஆகாரம் முதலிய பொதுத்தோற்றத்திலும், எழுத்துக்களின் பார்வையிலும், இதுவும் ஸ்ரீ ராமாநுஜனைப்போலவே காணப்படுவதால் இதுவும் அந்த அச்சகத்திலேயே அச்சிடப்பட்டிருக்கக்கூடும் என்று சிறிது அவசரப்பட்டு நினைத்துத்தான் அவ்வாறு எழுதிவிட்டோம். அத்தவறுக்காக நம்மை ஸ்ரீ ஸ்வாமி தயையுடன் க்ஷமித்தருளவேண்டுமென்று அவரைப் பிரார்த்தித்துக்கொள்கின்றோம்."

## முந்துறமுன்னம் ஒரு முக்கிய விஜ்ஞாபனம்

அஸ்மதாசார்யரான ஜகத்குரு காதி. அனந்தாசாரியர் ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி ஐம்பது வருஷமாகிறது. அந்த ஸ்வாமி ஸன்னிதியில் இவ்வாசிரியர் (ஜகந்நாதாசாரியர் ஸ்வாமி) சில ஸமய விசேஷங்களில் எழுந்தருள்வர். அந்த ஸ்வாமிக்கு இவரிடத்தில் விசேஷமான மதிப்பு இருந்ததை நேரில் கண்டிருக்கிறேன். "அநீதியாக யார் எது எழுதினாலும் நிர்தாக்ஷிண்யமாக–உபபத்தி புஷ்கலமாக மறுப்பெழுதுபவர் இவர்" என்று உகந்து ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். அதுமுதலாக இந்த ஸ்வாமியிடத்தில் நாமும் உண்மையாக மனமார்ந்த மதிப்பு வஹித்திருக்கிறோம். இந்த மஹாஸ்வாமி "...தவறுக்காக நம்மை ஸ்ரீ ஸ்வாமி தயையுடன் க்ஷமித்தருளவேண்டுமென்று அவரைப் பிரார்த்தித்துக் கொள்ளுகிறோம்" என்றெழுதி வெளியிட்டிருப்பதைக் கண்டு நாம் மிகமிக வருந்துகின்றோம். க்ஷமைவேண்டுவதற்கு ப்ரஸக்தி லேசமுமில்லை–ஸ்வாமி தவறாக ஒன்றும் எழுதிவிடவில்லை. இந்த க்ஷமாப்ரார்த்தநையை நாம் ஏற்றுக்கொள்ளவில்லை யென்பதை ஸவிநயம் விஜ்ஞாபிக்கிறோம்.

... ... ... ...

சில மாதங்களுக்கு முன்பு ஸ்ரீரங்கம் அட்வகேட் ஒருவர் காஞ்சீபுரம் தேவப்பெருமாள் தேவஸ்தானத்தைப்பற்றி ஆங்கில பாஷையில் வெளியிட்டிருந்த ஒரு சிறு சுவடிக்கு மறுப்பாக ஸ்ரீமான் உ. வே. (கபிஸ்தலம்) கோயில் பிரதிவாதி பயங்கரம்

ரங்காசாரியர் ஸ்வாமி வெளியிட்டிருந்த தத்வார்த்த நிரூபணமென்னும் நூலைப்பற்றி ஷெ தார்மிக ஹிந்துவின் ஆவணிமாதவிதழில் ஒரு கட்டுரை வெளிவந்திருந்தது அதைப் பெரும்பாலும் பலரும் வாசித்திருப்பர்கள். இப்போது புரட்டாசியிதழில் வெளி வந்ததையும் வாசித்திருப்பர்கள். ஆங்கிலத்திலெழுதி வெளியிட்ட அட்வகேட்டின் சிறு சுவடியைப்பற்றி ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்திரிகையில் பத்ராதிபஸ்வாமி மிக விரிவாக எழுதியிருந்த ஆராய்ச்சிக் கட்டுரையை உலகம் முழுவதும் வாசித்திருக்கு மென்றே நம்புகிறோம். அதனல் அவ்வாங்கிலச்சுவடிக்கு மறுப்பாக வெளிவந்த தத்வார்த்த நிரூபண நூலில் எழுதப்பட்டுள்ள விஷயங்கள் மிக்க பொருத்தமுடையன வென்பதையும், அவை அவசியம் எழுதப்படவேண்டியவையே என்பதையும் உலக முணர்ந்திருக்கும். சென்னையில் வாழும் ஸ்ரீமான் டாக்டர் ராமன் என்பவர் மஹா மேதாவி யென்று வைதிக லௌகிக உபய கோஷ்டியிலும் மிக்க பெரும்புகழ்பெற்றவர். அவர் காஞ்சீபுரம் ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தான விஷயமாகப் பல பல சிலா சாஸனங்களைக்கொண்டு மிகப் பெரியதோர் ஆராய்ச்சி நூல் (ஆங்கிலத்தில்) வெளி யிட்டிருந்தார். எழுதியதுமட்டும் அவர்; வெளியிட்டது அரசாங்கம் என்று கேள்வி. அதன் விலை (90) தொண்ணூறு ரூபாய். அந்த நூலுக்கு மறுப்பு எழுதவேணுமானல் காஞ்சீபுரவாஸியான ஒரு பிரமுகர் எழுதவேணும். அப்படிக்கு ஒருவரும் முன்வர வில்லை. காஞ்சீபுரம் இன்னதிக்கிலுள்ளது என்பதுகூட அறியாத வொருவர் அதற்கு மறுப்பெழுதும் பணியில் தலையிடவேண்டிய அவசியமே யில்லை. அநாவச்யகமாக எழுதப் புகுந்ததுமன்றியில் உலகம்போற்றநின்ற மஹாசார்யர்களை வலுவில் பிடித் திழுத்து, விரலுக்குத்தகாத வீக்கமென்னும்படியாக, அவர்களுடைய ஞானத்தில் குறைகூறி மனம் போனபடியும் கைபோனபடியுமெல்லாம் எழுதியிருந்தது மிக்க ஸாஹஸம். ஸ்வாமி தேசிகனுக்குப் பெரியவாச்சான்பிள்ளையின் திவ்யஸூக்திகளில் எவ்வளவு ஆதரம் என்பதை மாச்சரியமற்ற மஹாபண்டிதர்கள் அறிவர். அவருடைய ஸ்ரீஸூக்திகளைக்கொண்டே தேசிகன் வேதாந்தவிழுப்பொருள்களில் நல்ல தெளிவு பெற்றரென்பதை மறுக்கப் பிராமாணிகரொருவரும் முன்வரமாட்டார். "செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்று ஸாதித்தருளின தேசிகன் திருவுள்ளம் உண்மையாக எத்தகைத்தென்றல், பெரிய வாச்சான்பிள்ளை யிட்டருளின திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களை யோதித் தெளி கின்றோம் என்று தெரிவிப்பதேயாம். ஸச்சரித்ர ரக்ஷையில் பெரியவாச்சான்பிள்ளையை **ஆசார்யா:** என்றே நிர்தேசித்தருளியிருப்பதைப் பலகால் எடுத்துக்காட்டியிருக்கிறோம். இதில் வாய்திறக்க வழியில்லை யொருவர்க்கும். அப்படிப்பட்ட மஹாசார்யர்க்கு 'அது தெரியாது, இது தெரியாது' என்றெழுதுவது எவ்வளவு ஸாஹஸம்! இது நிற்க.

தார்மிக ஹிந்துவின் ஆசிரியர் விமர்சிக்கக் கொண்ட தத்வார்த்த நிரூபண நூலானது ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமியினலேயே பூர்த்தியாக எழுதப்பட்டதன்று; ஸ்ரீரங்கம் மெ. ஸுந்தரராஜாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ வேதவ்யாஸபட்டர்ஸ்வாமி, அடியேன் (P B A)ஆக மூவர் பலவாண்டுகட்கு முன்பு எழுதி வெளியிட்டிருந்த நூல்களிலிருந்து பல பகுதிகளைப் பக்கம் பக்கமாக அநுவதித்துள்ளது தத்வநிரூபண க்ரந்தம். வாக்ய சைலியை நோக்குமிடத்து எல்லாம் ஒருவ்யக்தியின் வாக்காகவே காணப்படுவதாக தார்மிக ஹிந்து வாசிரியர் தமது கருத்தை வெளியிடுகிறர். பகவத்கீதையில், த்ருத

ராஷ்ட்ரன், ஸஞ்ஜயர், அர்ஜுநன், கண்ணன் இந் நால்வருடைய சுலோகங்கள் உள்ளன. ஸ்ரீ ராமாயணத்தில் பரச்சத வ்யக்திகளின் சுலோகங்கள் உள்ளன. வசன வைகரியைக்கொண்டு வேற்றுமை கண்டுபிடிக்க முடிகிறதா ? மஹாபாரத முட்பட இதிஹாஸ புராணங்களெல்லாம் ஒரே வாக்சைலியாகத் தென்படவில்லையா ? ஶாகுந் தலம் முதலான நாடகங்களில் பெண்டிர் பேச்சுக்கு ப்ராக்ருத பாஷை, செம்படவன் பேச்சுக்குப் பைஶாசபாஷை......இப்படி வேற்றுமை காட்டப்பட்டுள்ளது. அப்படிப் பட்ட வாசியும் ஸ்ரீ ராமாயண பகவத்கீதாதிகளில் ஏதும் காட்டப்படவில்லை ராம லக்ஷ்மண பரதாதிகளின் வார்த்தைகள், சூர்ப்பணகா, மந்தோதரீ, அநஸூயா, சபரீ, தாரா ப்ரப்ருதிகளின் வார்த்தைகள்......இப்படியாகவுள்ள பரஸ்பர விஜாதீயர்களின் வார்த்தைகளத்தனையும் ஶைலீபரீக்ஷகர்களுக்கு ஒரேவிதமாகத் தோன்றவில்லையா ?

இவர்கள் நினைக்கிறபடியே யிருக்கட்டும். அந்த நிரூபண நூலில் தவருன விஷயங்களிருந்தால், உள்ள தவறுகளை யெடுத்துக்காட்டுவதும், வினுக்களிருந்தால் அவற்றுக்கு விடையிறுப்பதும், மற்றும் ஶாஸ்த்ரீய ஶரணியில் விமர்ஶங்கள் செய்வது மன்ருே பத்திராதிபர்களுக்கு ஒழுங்கான முறை. தத்வார்த்த நிரூபணகாரரான ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமி அதில் (பக்கம் xviiil) எழுதியிருப்பதாவது—

"ஆஸ்திகப்பெருமக்களே ! ஏழெட்டுமாத காலமாக ஆங்காங்கு ஸ்ரீ வைஷ்ணவ ஐக்கிய மகாநாடுகள் கூடி ஒற்றுமையியக்கத்தைப் பிரபலமாகப் பிரசாரம் செய்துவரு மிக்காலத்தில் இத்தகைய விஷயங்களைப் பிரசாரம் செய்வதில் நமக்கு எள்ளளவும் ருசியில்லை. திருச்சி அட்வகேட் ஸ்வாமி டாக்டர் ராமனுடைய நூலுக்குப் பதில் எழுதுவதாக எழுந்து அதற்கு ஸம்பந்தப்படாத வீண் வம்பு விஷமங்களைப் புகுத்தி வைத்திருப்பதால், அவற்ருல் பாமரர்கள் ஏமாற்றமடையாதபடிக்கு உண்மையான விஷயங்களை விளக்கவேண்டிப் பழைய புராணங்களை எடுத்துக்காட்டவேண்டிய தாயிற்று. வாஸ்தவமாகத் திருச்சி அட்வகேட் அக்னிஹோத்ரி ஸ்வாமியின் உபதேசங் களைக் கொள்ளாதிருந்தால் இவ்வளவு வளர்ச்சி ஏற்பட்டிராது. அவர் சொந்தமாக வெளியிட்டிருக்கிற ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தூஷணைகள் போதாமல் இந்த அட்வகேட்டின் பெயராலும் இப்படிப்பட்ட ஆபாஸங்களை வளர்த்தியிருக்கிருர்: அட்வகேட் ஒரு பாவமுமறியார் என்றே ஸ்ரீரங்கவாஸிகள் சொல்லக் கேள்வி" என்று.

தார்மிகஹிந்துவாசிரியர் இந்தப் பாராவை விமர்சிக்கவேண்டுவது அவசிய மல்லவா ? வைணவ ஐக்கிய மகாநாடுகளுக்கு முரணுக அஸம்பத்த விஷயங்களைப் பரப்பினவரைப்பற்றி இவர் ஏதேனுமெழுதியிருக்கிருரோ? மேலே அநுவதித்த பாரா வுக்கு அடுத்தபடியாக ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமி " இதோரற்புதங் கேளீர் ! " என்று தொடங்கி யெழுதியிருப்பவற்றையும் இங்கெடுத்துக்காட்டுகிறேன் காண்மின்; 'பெரிய வாச்சான்பிள்ளைக்கு ஸ்ரீபாஷ்ய பரிசயம் போதாது'என்று அட்வகேட் எழுதியிருந்ததன் மேல் எழுதப்பட்டவையாதலால் மேல்அநுவதிக்கப்படுமவற்றை அவசியம் காண்மின்

"இதோரற்புதங்கேளீர்; ஸ்ரீரங்கம் வக்கீல் எழுதுகிருர்—"பிள்ளானுடைய ஆருயி ரப்படியையும் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் முப்பத்தாருயிரப்படியையும் தென்

கலையார் ஆதரிப்பதில்லை; பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தையே ஆதரிக்கிறார்கள்''—என்று. இது அப்படியே உண்மையாகவே யிருக்கட்டும். இதற்குக் காரணம் தெரியுமோ? கேளும். பராக்கற்று உற்றுக்கேளும்; தேசிக னுக்கு ஆறாயிரப்படி என்று ஒரு வியாக்கியானம் அவதரித்திருந்ததென்பதே தெரியாது. தெரியாதென்பதை ஆயிரந்தடவை சொன்னாலும் எழுதினாலும் புநருக்தி துஷ்டமாகாது. ''தேசிகனுக்கு ஆறாயிரப்படி தெரியும்'' என்று யார் நிரூபித்தாலும் அவர்க்கு ஆறாயிரம் ரூபாய் செலுத்தத் தடையில்லை என்று சபதம் செய்திருப்பார் பலருண்டு; அந்த சபதத்தை நானும் செய்கிறேன். ஈடு முப்பத் தாறாயிரப்படி தேசிகனுக்கு முன்னே திருவவதரித்திருந்தாலும் அந்த வியாக்கி யானம் தேசிகன் காலத்தில் பிரசாரம் பெறவில்லை யென்பது, உபதேசரத்தின மாலையில் *சீரார்வடக்குத் திருவீதிப்பிள்ளை* *ஆங்கவர்பால்பெற்ற* என்றுள்ள இரண்டு பாசுரங்களினால் ஸ்பஷ்டம். ஆகவே தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படி வியாக்கியானத்தையே தாம் காலக்ஷேபம் செய்தருளினார். பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த வியாக்கியானங்கள் தேசிகன் காலத்தில் ப்ரவசன பரம்பரையிலிருந்தனவென்பது தேசிகனுடைய ஸ்ரீஸூக்தியினாலேயே ஸ்பஷ்டமாகிறது. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் பெரிய திருமொழி (1-1-9) *குலந்தருமென்கிற பாசுரத்தின் வியாக்கியான பங்க்திகளை யுதாஹரித்து ''இப்படி அபியுக்தர் வியாக்கியானம் பண்ணினார்கள்'' என்று எழுதிவைத்திருப்பது குன்றிலிட்ட விளக்காக இராநின்றதன்றோ? அன்றியும், தேசிகன் பணித்தருளின த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியும் ஸாரமும் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்யானத்தைக்கொண்டே [அதனை யடியொற் றியே] ஸாதிக்கப்பட்டன வென்பது கல்வெட்டா யிருப்பதாம். ஆகவே, தேசிகன் தாம் காலக்ஷேப க்ரந்தமாகக்கொண்ட பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத் தையே தென்கலையார்கள் விசேஷித்து ஆதரிப்பதைஇந்தஅட்வகேட் ஸந்தோஷ மாக எழுதவேண்டியவரேயொழிய குற்றச்சாட்டாக எழுதுவது அசட்டுத்தன மாகும் என்பதில் ஐயமில்லை. இவர் தாம் பெரிய ஸ்ரீபாஷ்யாதிகாரிபோல, பெரிய வாச்சான் பிள்ளைக்கு ஸ்ரீபாஷ்ய பரிசயம் போதாது என்றெழுதுகிறார். ஸர்வஜ்ஞர் களான ஆசாரியர்களைப்பற்றி ப்ரஸங்கிக்க இவரா அதிகாரி? ''தர்க்கபாண்டித் யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கவல்லோம்'' என்றெழுதிவைத்து அப்படியே ஸாதித்தவர்களின் தர்க்கபாண்டித்யம் எவர்க்குமில்லைதான். மீமாம்ஸா சாஸ்த்ர யுக்மச்ரம விமலமநா: ம்ருக்யதாம் மாத்ருசோந்ய:* என்ற ஆளவந்தார் போல் வார்க்கும் இல்லைதான். எம்பெருமானுடைய வ்யாப்தி விஷயத்தை விசாரிக்கப் புகுந்து ஸ்ரீ நியாயஸித்தாஞ்ஜநத்தில் *க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வசப்த கோபோ வா* என்கிற ஸித்தாந்த ஸூத்ரத்தையுமெழுதி *அத: யதாகமம் ஸர் வத்ர பூர்ண ஏவ* என்றெழுதிவைத்து, ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் இந்த ஸூத்ரத்தை மறந்தோ உபேக்ஷித்தோ *வஸ்து தோறும் பரிஸமாப்தியன்று* என்று எழுதிவைத்தவர்களுக்கே ஸ்ரீபாஷ்யத்தில் ப்ரசண்டபாண்டித்யமிருக்கட் டுமே. அப்படிப்பட்ட பாண்டித்யம் பெரியவாச்சான்பிள்ளைக்கு இல்லைதான்.

ஒரு ஸ்வாமி காலை வேளைகளில் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார ப்ரவசனமும், பகல் வேளைகளில் நியாயஸித்தாஞ்ஜந ப்ரவசநமும் செய்து போருகிறார். ஒருநாள் காலையில் மூலமந்த்ராதிகார ப்ரவசநமாகும்போது "வ்யாப்தனுக்கு ப்ரதிவஸ்து பூர்ணத்வமாவது ஒரொரு உபாத்யவச்சிந்நப்ரதேசமே ஸர்வத்தையும் நிர்வஹிக்க வல்ல சக்தியுடைத்தாயிருக்கை; அல்லது வஸ்துதோறும் ஸ்வரூபஸமாப்தியன்று; இது கொள்ளில் பஹிர்வ்யாப்திக்கு விருத்தமாம்" என்கிற பங்க்திகளை ஸேவித்து அர்த்தம் ஸாதித்தாயிற்று. அன்றைக்கே பகலில் நியாயஸித்தாஞ்ஜந ப்ரவசநத்தில் *ச்ருதேஸ் து சப்தமூலத்வாத்* ......இத்யாதிகளை ஸேவிக்கையில் 'காலை கேட்டதற்கும் இப்போது கேட்பதற்கும் முரண்பாடு காண்கிறதே! எப்படி ஸமாதானம்?' என்று சிஷ்யர்கள் கேட்க, 'அதுவொருபக்ஷம், இதுவொருபக்ஷம். விரோதமென்ன?' என்று ஸாதித்தாராம். அதுகேட்ட சிஷ்யர்கள் த்ருப்தி பெறாமல் முகம் கடுத்திருந்தார்களாம். பின்னையும் ஸ்வாமி ஸாதித்ததாவது—"நீங்கள் அஸ்தானத்திலே மயங்குகிறீர்கள்; ஒருஸமயம் சுக்லபக்ஷே என்றும், மற்றொரு ஸமயம் க்ருஷ்ணபக்ஷே என்றும் சொல்லுகிறோம்; அவ்வளவேயா? ஒரு ஸமயம் மீநமாஸே என்கிறோம். மற்றொரு ஸமயம் மிதுநமாஸே என்கிறோம். சொன்னதையே சொல்லிக்கொண்டிருக்க முடியுமா? ஒருவேளை *யதஹ்நா பாபமகார்ஷம்* என்கிறோம். மற்றொருவேளை *யத் ராத்ரியா பாபமகார்ஷம்* என்கிறோம். இப்படி ஒன்று இரண்டா? ஆயிரம் பதினாயிரமன்றோ? இவற்றில் முரண்பாடு ஸங்கிப்பாருண்டோ? என்று விரிவாக ஸாதித்து 'இப்போது ஸமந்வயமாயிற்றா?' என்று கேட்க, நன்றாக ஆயிற்று என்றார்களாம்."

தத்வார்த்த நிரூபணத்திலிருந்து இப்படி நாம் எடுத்துக்காட்டவேண்டிய விஷயங்கள் மற்றும் பலபல விருந்தாலும் இவ்வளவே போதுமிப்போது. நம்முடைய பல நூல்களில் எழுதப்பட்டிருந்த விஷயங்களே உருமாற்றி எழுதப்பட்டவை இவை. இவற்றை நாம் விநயத்தோடு வினவுகிற ஸந்தேஹப்ரச்னங்களாகக்கொண்டு விடையளிக்கவல்ல வித்வான்களை இதுகாறும் கண்டிலோம். நிந்தாபரிஹாஸாதிகளை அறவே விட்டிட்டு ப்ராமாணிகஸரணியில் எழுதக்கூடியவர் நமது ஸுஹ்ருந்மணியான தார்மிக ஹிந்து வாசிரியர் ஒருவரே யென்பது நமது நம்பிக்கை. ... ... *

— வாஸுதேவ: ப்ரஸீதது. —

## இலவசமா? இலவசமா?

ஒருவரிடம் உயர்ந்த பொருளொன்றைக் கண்டவர் "இது மிக நன்றாயிருக்கிறதுடா; எங்கே வாங்கினாய்? என்னவிலை?" என்று கேட்க; நான் விலைகொடுத்து வாங்கவில்லை; இலவசமாகக் கிடைத்தது" என்று சொல்லி, கிடைத்தபடியைக் கூறுகிறாரவர். விலையில்லாமல் இனாமாகக் கிடைத்தது என்பதே அதன்பொருள். இலவசம் என்னுஞ்சொல்லுக்கு (இனாம்) என்கிற பொருள் எப்படி கிடைக்கும்? என்று ஒருவர் நேற்று நம்மைக்கேட்டார். இதைப்பற்றி இளமையில் திருத்தகப்பனாரிடம் கேட்டிருந்ததை எழுதுகிறேன். (**ஒரு சிறுகதை**) ஒருவர் தனிகரான தமதுநண்பரிடத்தில் நூறு ரூபாய் கடனாக அபேக்ஷித்தார். அண்டிமாண்டு எழுதிக் கொடுப்பதாகக் கூறினார்; அந்தத் தனிகர் யார்க்கும் கடன் கொடுப்பதில்லை யென்கிற விரதமுடையவர்; கடன்

கேட்டவர்க்கு ஏதாவது உபகரிக்கவேணுமென்கிற ஆசையுங்கொண்டவர். ஆகவே அவர் என்ன செய்தாரென்னில்; தாம்கொடுக்க விரும்பின தொகையைத் தாம்பூலத்தில் வைத்துக் கொடுத்தார். அவரும் ஸந்தோஷமாகப் பெற்றுக்கொண்டார். கடனாகக் கொடுப்பவர் தாம்பூலத்தில் வைத்துக் கொடுக்கமாட்டார். இனாமாகக் கொடுப்பதை வெறுமனே கொடாமல் தாம்பூலத்தில் வைத்தே கொடுப்பர். ஆகவே, இலைவசமாக— வெற்றிலை வசமாக; இனாமாக என்றதாயிற்று. அந்தச் சொல்லே இலவசமாகவென்று மாறிற்று. இதை மரூஉமொழியென்றுங்கொள்ளலாம். நிலயம என்கிற வடசொல்லை நிலையம் என்றே தமிழில் எழுதிவருகிறார்கள். அதைத் தவறாக நினைக்கவேண்டாம். அப்படியே இலவசம் என்பதையும் தவறாக நினைக்கவேண்டாம். ... ... *

## வெளியீட்டு விளம்பரம்

ஸ்ரீ ராமாநுஜன் சென்றவிதழில் ராப்பர் இரண்டாவது பக்கத்தில் "விசேஷ அறிவிப்பு" என்ற தலைப்பின்கீழ் நாம் வெளியிட்டிருந்ததாவது—"ஸ்ரீமத் வரவரமுநி வர்ய ஸித்தாந்தஸாரம்-என்கிறநூல் அடியேனால்(P BA)எழுதிஅச்சிடப்பட்டு மாமுனிகளின் உத்ஸவத்தில் அரங்கேற்றம் செய்யப்படும்" என்பதாக. அந்தநூல் அச்சிட்டு முடிக்கப்பட்டது. ஆனால் அது ஸ்ரீ ராமாநுஜனில் சேர்க்கப்படாமல் தனிப்புத்தகமாகவே ஸித்தப்படுத்தப்பட்டது. ப்ரஸித்த வித்வான்களுக்குமட்டுமே அனுப்பப்பட்டு வருகிறது. விருப்பமுள்ளவர்கள் கீழ்க்கண்ட விலாசத்திற்கு **3** ரூபாய் (போஸ்டேஜ் உட்பட) அனுப்பிப் பெறலாம். **தி. அ. அனந்தாழ்வான்.**

24, தென்னண்டை மாடவீதி, காஞ்சீபுரம்-631 503.

## ஸ்ரீவைஷ்ணவவுலகுக்குப் பெருந்துயரம்

ஸ்ரீமதுபயவே. திருமலை விஞ்சிமூர். (காவல்கழனி) அனந்தாசாரியர் ஸ்வாமியென்பவர் திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்தவர், தென்னாட்டிலுள்ள ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் இந்த ஸ்வாமியை நன்கறிவர்கள். இவர் 25—10—77 செவ்வாய்க்கிழமை 12 மணிக்கு தமதுதிருமாளிகையில் அநாயாஸமாகத் திருநாட்டுக்கெழுந்தருளின செய்தியை யறிவிக்க மிகமிக வருந்துகிறோம். பரமபதிப்பதற்குச் சில நாழிகை முன்வரையில் ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி ஸன்னிதியில் அன்பர்களோடு ஸஹஜமாக வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தார். பாம்பே பனஸவாடியில் ஸ்ரீகாஞ்சீ. ஜகத்குரு ப்ரதிவாதிபயங்கரஸ்வாமியின் ஸ்ரீவேங்கடேச தேவஸ்தானத்தில் ஸமீபத்தில் நடந்த திருவேங்கடமுடையான் ப்ரஹ்மோத்ஸவத்திற்குச் சென்றிருந்து முதல்நாள்தான் திரும்பிவந்து சேர்ந்தார். இளமையில் திருத்தகப்பனாரோடுகூட ஸ்ரீகாஞ்சியிலேயே வாழ்ந்திருந்து வித்யாக்ரஹணம் செய்தார். ஆழ்வார்களருளிச்செயலில் அத்விதீய நிபுணர். ஸ்ரீபார்த்தஸாரதி ஸன்னிதி கைங்கரியங்களில் ஒத்தாரும்மிக்காருமின்றி ஈடுபாடுடையராயிருந்தவர். 25 வருஷங்களுக்குமேல் சென்னையில் டிப்டி-தாசில்தாரராயும், தாசீல்தாரராயும் பணியாற்றிச் சிலமாதங்களுக்கு முன்புதான் ஓய்வுபெற்றார். ஆகஸ்மிகமாக நேர்ந்த இவருடைய வியோகம் ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்துக்கெல்லாம் ஆற்றவொண்ணாத துயரம். விசேஷித்து ஸ்ரீபார்த்தஸாரதி யெம்பெருமானுக்கே. *

— உபந்யாஸக ஸௌபாக்யமாலை —

## இதிஹாஸபுராணாதிகளில் வினவிடைகள் (முன் தொடர்ச்சி)

[வினா] ஸீதாபிராட்டி தனக்குச் சிறியதோர் அபராதமும், பெரியதோர் அபராதமும் உண்டு என்றாளே; அது எங்குள்ளது? அவ்வபராதங்கள் எவை?

[விடை] திருவடியை நோக்கிச் சொல்லும் வார்த்தைகளில் *மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹத் அஸ்தி ந ஸம்ஶய:, ஸமர்த்தாவபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ* என்றாள் பிராட்டி; பெருமாளும் இளையபெருமாளும் எனக்கு நேர்ந்துள்ள கஷ்டத்தைத் தெரிந்து கொள்ளவும், விரோதிநிரஸனம்பண்ணி என்னைச் சேர்த்துக் கொள்ளவும் ஸமர்த்தர்களாயிருக்கச் செய்தேயும் என்னைக் கண்ணெடுத்துப் பாராமலிருப்பதனால் எனக்கு பகவதபசாரமாகிற சிறியதொருபாபமும், பாகவதாபசாரமாகிற பெரியதொரு பாபமும் உள்ளதென்று நிச்சயிக்கவேண்டியதாகிறது—என்றாளாயிற்று கிஞ்சித் என்னும்படியான துஷ்க்ருதம் எது? மஹத் என்னும்படியான துஷ்க்ருதம் எது? என்னில்; பெருமாள் காட்டுக்குப் புறப்படுவதற்குமுன் பிராட்டியைச் சந்தித்து வார்த்தையாடுகையில், ,நான் தந்தை தாயரின் கட்டளைப்படி காட்டுக்குப்போக நேர்ந்திருக்கிறது, போய் வருகிறேன், நீ நகரத்திலேயே மாமியார் மாமனார்க்குப் பணிவிடை செய்துகொண்டிரு' என்றுகூற, பிராட்டி தன்னையும் உடனழைத்துக்கொண்டு செல்லுமாறு நிர்ப்பந்திக்க, இராமன் காட்டின் கொடுமைகளைக்கூறி மறுத்தபோது, [*ப்ரணயாச் ச அபிமாநாச் ச பரிசிக்ஷேப ராகவம்*[—*கிம் த்வா அமந்யத வைதேஹ: பிதா மே மிதிலாதிப:, ராமஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்*—என் தகப்பனார் ஆணுடையுடுத்துவந்த பெண்பிள்ளையாகிய உம்மை ஆணென்று மயங்கிக் கந்யகாதானம் செய்துவிட்டாரே! என்னொருத்தியைக் காப்பாற்றமாட்டாத நீர் ஒரு ஆண்பிள்ளையா?' என்று ப்ரணயரோஷம் தலையெடுத்துக் கடிந்து கூறியது (அயோத்யா காண்டம் முப்பதாவது ஸர்க்கத்தில்) காணத்தக்கது, இந்த பகவதபசாரம் [கிஞ்சித் துஷ்க்ருதம்] என்றதற்கு இலக்கு. மேலே ஆரண்யகாண்டத்தில் மாரீசமாயாம்ருகத்தின் மாயக் கூக்குரலைக்கேட்ட பிராட்டி இராமபிரானுக்கு வலியதோர் விபத்து விளைந்திட்டதாக மருண்டு இளையபெருமாளைக் கடிந்து கூறியது, அதில் பரதாழ்வானையும் சேர்த்து அதிக்ஷேபித்தது—இவை 'மஹத் துஷ்க்ருதம்' என்றதற்கு இலக்கு, (இது ஆரண்யகாண்டம் நாற்பத்தைந்தாம் ஸர்க்கத்தில் காணத்தக்கது.)

[வினா] பகவதபசாரத்தை மஹத்தாகவும், பாகவதாபசாரத்தைச் சிறிதாகவும் சொல்லலாகாதோ? பகவான் ஸர்வோத்க்ருஷ்டனாகையாலே அவன் திறத்தில் நேரும் அபசாரத்தைச் சிறிதென்று சொல்லலாமோ?

[விடை] பெரியோர்களிடத்துக் கேட்டதை விஜ்ஞாபிக்கிறேன். கண்ணபிரான் பாண்டவர்களுக்காகத் துரியோதனதியரிடம் தூதெழுந்தருளினபோது *விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்திச* என்கிறபடியே விதுரர் திருமாளிகையிலே அமுது செய்துவிட்டு அங்கே யெழுந்தருள, *பீஷ்மத்ரோணாவதிக்ரம்ய மாஞ்சைவ மதுஸூதந!, கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷலபோஜநம்*—ஜ்ஞாநாதிகரான பீஷ்மா

சாரியரையும், ஜாதியில் உயர்ந்த த்ரோணசார்யரையும், செல்வத்தில் சிறந்த என்னை யும் உபேக்ஷித்துவிட்டு ஒரு சூத்ரனுடைய சோற்றை யுண்டது என்னே ? இது செய்யத்தகுமா ? என்று கேட்க, அதற்கு ஸமாதானமாக *ந சூத்ரா பகவத்பக்தா: விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:* இத்யாதிகளைச் சொல்லலாமாயிருக்க, அந்த வழியில் ஸமாதானம் கூருதே *த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத், பாண்டவாந் த்விஷஸே ராஜந்! மம ப்ராண ஹி பாண்டவா:* என்று கண்ணபிரான் கூறியது ப்ரஸித்தம். இதனால் பாகவதர்கள் பகவானுக்கு உயிர்நிலையானவர்களென் பது விளங்கிற்று கத்தியை உடலில் ஏதேனுமோரவயவத்தில் இட்டு வெட்டினால் மருந்திட்டு ஆற்றலாம்; அந்தக் கத்தியை உயிர்நிலையிலேயிட்டு வெட்டினால் பின்னைப் பரிஹாரமுண்டோ ? ஆக, பகவான் பாகவதர்களை ப்ராணனாகக் கொண்டிருக்கை யாலே பகவதபசாரத்தைவிட பாகவதாபசாரமே மேம்பட்டதென்று தேறிற்று. ஆகவே பிராட்டி 'மஹத் துஷ்க்ருதம்' என்றது பரதலக்ஷ்மணர்களிடத்தே பட்ட வாசிகாபசார த்தையே எனப் பொருந்தும். ... ... ... ... *



திருவல்லிக்கேணியில் ஸ்ரீமதுபயவே தேசூர் ஸ்வாமியென்றே ப்ரஸித்தராய் விளங்கும் மஹாஸ்வாமியின் திருவுருவப்படமிது நேற்று புரட்டாசி மாதத்தில் சதாபிஷேகம் கண்டருளினர் இந்த ஸ்வாமி. ஸ்ரீபார்த்தஸாரதி கைங்கரியத்தில் இடைவிடாமல் ஈடுபட்டிருக்குமிந்தஸ்வாமி 'வையம் மன்னி வீற்றிருக்கவேணு'மென்று ஸ்ரீவைஷ்ணவவுலகம் முழுதும் பாரிக்கின்றது.

—பத்ராதிபர்.

**அருளிச்செயல் பகுதி** ★

# திவ்யப்ரபந்தத்தில் விலக்ஷணமான பரீக்ஷை

***(சிறுபிள்ளைகள் இத்தகைய பரீக்ஷைகளில் தேறப் பழகவேணும்)***

உபாத்யாயர் கண்ணனென்கிற மாணுக்கனை நோக்கிச் சொல்லுகிறார்—

**"கண்ணு ! இன்று நான் உன்னைப் பத்து பாட்டு கேட்க விரும்பி யிருந்தேன், சொல்லு"** என்று

அன்பர்களே ! இந்த வாக்கியத்தில் பத்து சொற்கள் இருக்கின்றன; இதில் பரீக்ஷை முடிந்துவிட்டது. இந்த வாக்கியத்திலுள்ள ஒவ்வொரு சொல்லையும் தொடக்கமாகக் கொண்ட பத்துப் பாசுரங்களைச் சொல்லவேணுமென்பது உபாத்யாயருடைய கருத்து. இதுதான் பரீக்ஷை. மாணுக்கன் மிகவும் ஸமர்த்தனுகையாலே கருத்தறிந்து உடனே விடை யிறுக்கத் தொடங்கிவிட்டான்.

1. **கண்ணு !** = * கண்ணு நான்முகனைப் படைத்தானே. (பெரியாழ்வார் 5–1–6.)
2. **இன்று** = * இன்றுவந்தித்தனையும். (நாச்சியார் 9–7.)
3. **நான்** = * நான்முகனை நாராயணன் படைத்தான். (4-திருவந்தாதி 1.)
4. **உன்னை** = * உன்னைச் சிந்தை செய்து செய்து. .(திருவாய். 2–6–6.)
5. **பத்து** = * பத்துடையடியவர்க் கெளியவன். (திருவாய்-1, 3, 1.)
6. **பாட்டு** * பாட்டு முறையும் படுகதையும். (நான்முகன் திரு-76.)
7. **கேட்க.** * கேட்கயானுற்றதுண்டு. (திருக்குறு–4.)
8. **விரும்பி.** * விரும்பிநின்றேத்தமாட்டேன். (திருமாலை 17.)
9. **இருந்தேன்.** * இருந்தேனிருவினைப்பாசம். (இராமானுச நூற்-32.)
10. **சொல்லு.** *சொல்லுவன் சொற்பொருள் (பெரிய திருமொழி 2–9–1.)

## — இதேபோல் மற்றொரு பரீக்ஷை

**நங்கைமீர்! உங்கள் மண்வீடு அடியோடு நன்ருயில்லை; எங்களது மாடமாளிகை முழுதும் தந்தம் பொன் வெள்ளி வெண்கலம் இரும்பானது; ஆயிரம் மக்கள் உள்ளே யடங்க இடமுண்டு.**

அன்பர்களே ! இந்த வாக்யராசியில் 24 சொற்கள் உள்ளன; இதனுல் இருபத்துநான்கு பாசுரங்கள் பரீக்ஷிக்கப்பட்டன வென்றபடி. மாணுக்கன் உடனே விடை யிறுக்கிறுன்;—

1. **நங்கைமீர் !** * நங்கைமீர் நீரு மோர் பெண் பெற்று. (திருவாய். 4-2-9)
2. **உங்கள்.** * உங்கள் புழைக்கடை; (திருப்பாவை 14)
3. **மண்.** * மண்ணுய் நீரெரிகால் (பெரிய திரு. 1–9-6)
4. **வீடு.** * வீடுமின்முற்றவும் (திருவாய். 1-2-1.)
5. **அடி.** * அடியால் படிகடந்த முத்தோ. (பெரிய திருவ. 27)
6. **ஓடு.** * ஓடுவார் விழுவார். (பெரியாழ். 1-1–2)
7. **நன்ருய்.** * நன்ருய் ஞானங்கடந்துபோய். (திருவாய். 8–8–6)
8. **இல்லை.** * இல்லையல்லல். திருவாய்மொழி (9–10–10)

9. **எங்கள்.** எங்கள் கண்முகப்பே. (திருவாய்மொழி 9-2-8)
10. **அது.** * அது நன்றிது தீதென்று. திருவந்தாதி
11. **மாடமாளிகை.** * மாடமாளிகை சூழ்திருமங்கை. (பெரிய திரு 5-8-10)
12. **முழுதும்:** * முழுதும் வெண்ணெயளைந்து. (பெருமாள் 7-8)
13. **தந்தம்.** * தந்தம் மக்களழுதுசென்றல். (பெரியாழ். 2-2-3)
14. **பொன்.** * பொன்போல் மஞ்சனமாட்டி. (ஷெ 3-1-2)
15. **வெள்ளி.** * வெள்ளியார் பிண்டியார் போதியார். (பெரிய திரு. 9-7-9)
16. **வெண்கலம்.** * வெண்கலப் பத்திரம். (பெரியாழ். 1-9 5)
17. **இரும்பு.** * இரும்பு அனன்றுண்ட. (திருக்குறுந்-5)
18. **ஆனது.** * ஆனது செம்மையறநெறி. (இராமாநுச நூ.)
19. **ஆயிரம்.** *ஆயிரந்தோள்பரப்பி. (பெரியாழ். 4-3-10)
20. **மக்கள்.** * மக்கள் பெறுதவம்போலும். (பெரிய திரு. 10-4-2)
21. **உள்ளே.** * உள்ளே யுருகிநைவேனை. (நாச்சியார் 13-8)
22. **அடங்க.** * அடங்கெழில் சம்பத்து. (திருவாய் 1-2-7)
23. **இடம்.** * இடம்வலமேழ்பூண்ட. (திருவந்தாதி)
34. **உண்டு.** * உண்டுகளித்தேற்கு. (திருவாய்—)

**விண்ணப்பம்.** இத்தகைய பரீக்ஷைகளில் மயங்காமல் உடனே விடையிறுத்துத் தேறக்கூடியவர்கள்—(1) அடியேன் குமாரன் P. B. ரங்கநாதன், (2) அடியேன் தௌஹித்ரன் அக்காரக்கனி அனந்தாழ்வான் ஆகிய சிரஞ்சீவிகள் இருவர். இத்தகைய பரீக்ஷைகளில் தேறுவதற்கு தைரியமுள்ளவர்கள் நாளது 16—11—77 முதல் 25—11—77 வரை இங்கு நடைபெறும் நம்பிள்ளை மஹோத்ஸவத்தில் வந்திருந்து அருளிச் செயல் கைங்கரியம் செய்து, பரீக்ஷையுங் கொடுத்து ஸன்மானம் பெறலாம்.

தாஸன், P. B. **அண்ணங்கராசாரியார்.**

# ஸ்ரீ ராமாயணத்தில் பல அருமையான விஷயங்கள்

— ஸ்ரீ ராமாயணத்திலிருந்து அபூர்வரீதியில் பல விஷயங்களை யெடுத்து விளக்கிவர விருப்பம். அவற்றுள் இது முதல் விஷயம். —

ஸ்ரீராமாயணத்தில் பல நூற்றுக்கணக்கான ஆராய்ச்சிகள் செய்யவேண்டியிருக்கிறது. அவற்றுள் இஃதொரு ஆராய்ச்சி விலக்ஷணமானது. ஸ்ரீராமபிரான் யார்யாரைப் பரிஷ்வங்கம் (ஆலிங்கனம்) செய்துகொண்டது? யார்யார் ஸ்ரீராமபிரானைப் பரிஷவங்கம் செய்து கொண்டார்கள்? என்பதை விமர்சிப்பது ஒரு விநோதம். பெரும்பாலும் யாவருமறிந்த இரண்டு பரிஷ்வங்கங்களுண்டு. *ஏஷ ஸர்வஸ்வ பூதஸ் து பரிஷ்வங்கோ ஹநூமத:, மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ் தஸ்ய மஹாத்மந:* என்கிறபடியே பெருமாள் திருவடிக்குக் கொடுத்த பரிஷ்வங்கமொன்று. *தம் த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம், பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே* என்கிறபடியே (கரதூஷணுதிவதத்தின்போது) பெருமாளுக்குப் பிராட்டி கொடுத்த பரிஷ்வங்கமொன்று. இவை யிரண்டும் ஸுப்ரஸித்தமாகையாலே

இவ்விரண்டையும் பலருமறிவர். ஆசார்யஹ்ருதயத்தில் *வித்யை தாயாகப்பெற்று* என்றுதொடங்கி 'பரதஅக்ரூரமாருதிகளைப்பரிஷ்வங்கித்தமணிமிகுமார்பிலேகுருமாமணியாய் அணையும் வஸ்துவுக்கு மணிவல்லிப்பேச்சு வந்தேறியன்று' என்று தலைக்கட்டும் சூர்ணையில் மாருதி பரிஷ்வங்கத்திற்குமுன்பே பரதாழ்வானுடையவும் 'அக்ரூரருடையவும் பரிஷ்வங்கத்தை அருளிச்செய்திருக்கையாலே *தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்த: சிரஸ்யாக்ஷிபதம் கதம். அங்கே பரதமாரோப்ய முதித: பரிஷஸ்வஜே* என்று இராமபிரான் பரதாழ்வானுக்கும். *ஸோப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருத சிஹ்நேந பாணிநா, ஸம்ஸ்ப்ருச்ய ஆக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே* என்று கண்ணபிரான் திருவாய்ப்பாடிக்கு வந்த அக்ரூரருக்கும் அளித்த பரிஷ்வங்கத்தையும் சிலர் அறிந்திருப்பர்.

ஸ்ரீராமாயணத்தில் அயோத்யா—அரண்ய—கிஷ்கிந்தா—ஸுந்தர—யுத்த காண்டங்களில் காணும் பரிஷ்வங்கங்களைப் பெரும்பாலுமிங்குத் தெரிவிக்கிறோம்.

# அயோத்யாகாண்டத்தில் பெருமாள் செய்தருளின பரிஷ்வங்கங்கள்

30—23. *தாம் பரிஷ்வஜ்ய பாஹுப்யாம் விஸம்ஜ்ஞாமிவ து:கிதாம், உவாச வசநம் ராம:* [பிராட்டியைப் பெருமாள் தழுவியது]

34—20. *தம் பரிஷ்வஜ்ய பாஹுப்யாம் தாவுபௌ ராமலக்ஷ்மணௌ.* [தாசரதிகள் சக்ரவர்த்தியைத் தழுவியது]

50—4'. *புஜாப்யாம் ஸாது வ்ருத்தாப்யாம் பீடயந் வாக்யமப்ரவீத். [குஹப் பெருமாளைப் பெருமாள் தழுவியது]

100—3. *ஆக்ராய ராமஸ் தம் மூர்த்நி பரிஷ்வஜ்ய ச ராகவ:, அங்கே பரதமாரோப்ய...* [பரதாழ்வானைப் பெருமாள் தழுவுதல்]

102—47. * தாந் நராந் பாஷ்பபூர்ணாக்ஷாந் ஸமீக்ஷ்யாத ஸுது:க்கிதாந், பர்யஷ்வஜத தர்மஜ்ஞ: பித்ருவந் மாத்ருவச்ச ஸ: * [சித்திரகூடம் சென்ற பௌரஜனங்களைப் பெருமாள் தழுவியது)

102—48. *ஸ தத்ர காம்ச்சித் பரிஷஸ்வஜே நராந். ஷ

112—27. *ததேதி ச ப்ரதிஜ்ஞாய தம் பரிஷ்வஜ்ய ஸாதரம், ஶத்ருக்நஞ்ச பரிஷ்வஜ்ய பரதஞ்சேதமப்ரவீத்*. [பரதஶத்ருக்நர்களைப் பெருமாள் தழுவியது]

## ஆரண்ய காண்டத்தில் பெருமாள் செய்தருளின பரிஷ்வங்கங்கள்

5—1. ஹத்வா து தம் பீமபலம் விராதம் ராக்ஷஸம் வநே, ததஸ் ஸீதாம் பரிஷ்வஜ்ய ஸமாச்வாஸ்ய ச வீர்யவாந்* [விராதவதத்திற்குப் பிறகு பெருமாள் பிராட்டியைத் தழுவியது]

67—22. * ச்ருத்வா ஜடாயுஷோ வாக்யம் ராமஸ் ஸௌமித்ரிணா ஸஹ, க்ருத்ரராஜம் பரிஷ்வஜ்ய பரித்யஜ்ய மஹத் தநு:. [பெரியவுடையரைப் பெருமாள் தழுவியது]

67—29. * நிக்ருத்தபக்ஷம் ருதிராவஸிக்தம் ஸ க்ருத்ரராஜம் பரிரப்ய ராம:. [இதுவுமது]

### அயோத்யாகாண்டத்தில் பெருமாளுக்குக் கிடைத்த பரிஷ்வங்கங்கள்

3—34. *தம் த்ருஷ்ட்வா ப்ரணதம் பார்ச்வே க்ருதாஞ்ஜலிபுடம் ந்ருப:, க்ருஹ்யாஞ்ஜலௌ ஸமாக்ருஷ்ய ஸஸ்வஜே ப்ரியமாத்மஜம்*. [தசரத சக்ரவர்த்தி பெருமாளை யணைத்தது]

4—11. *ப்ரணமந்தம் ஸமுத்தாப்ய தம் பரிஷ்வஜ்ய பூமிப:, [இதுவும் சக்ர வர்த்தி பெருமாளை யணைத்ததைச் சொன்னது]

20—21. *பரிஷ்வக்தச் ச பாஹுப்யாம் உபாக்ராதச் ச மூர்த்தநி, [கௌஸல் யாதேவி பெருமாளைத் தழுவியது]

25-46. *ப்ரதக்ஷிணஞ்சைவ சகார ராகவம் புந:புநச்சாபி நிபீட்ய ஸஸ்வஜே. [இதுவும் கௌஸல்யாதேவி தழுவியது]

30—22. *சுக்ரோஶ பதிமாயத்தா ப்ருஶமாலிங்க்ய ஸத்வரம்*. [பிராட்டி பெருமாளைத் தழுவியது]

### ஆரண்யகாண்டத்தில் பெருமாளுக்குக் கிடைத்த பரிஷ்வங்கங்கள்

7—7. * ஸ நிரீக்ஷ்ய ததோ வீரம் ராமம் தர்மப்ருதாம் வரம், ஸமாச்லிஷ்ய ச பாஹுப்யாம் இதம் வசநமப்ரவீத்* (ஸுதீக்ஷ்ண முனிவர் பெருமாளைத் தழுவியது)

8—10. * தௌ ஸம்ஸ்ப்ருஶ்ய தௌ சரணாவுத்தாப்ய முநிபுங்கவ:, காடமாச் லிஷ்ய ஸஸ்நேஹமிதம் வசநமப்ரவீத் * (ஸுதீக்ஷ்ணர் ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களைத் தழுவியது)

30—39. * தம் த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம், பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே* (கரதூஷணாதிவதத்திற்குப் பிறகு பெருமாளைப் பிராட்டி தழுவியது.) ... ... ... ...

### கிஷ்கிந்தாகாண்டத்தில் பெருமாள் செய்தருளின பரிஷ்வங்கம்

5-14—7-16—12-12—39-1—40-1 ஆகிய இந்த ஐந்து இடங்களிலும் பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜரைத் தழுவியதொன்றே சொல்லிற்று.

ஸுந்தரகாண்டத்தில், பரிஷ்வங்க ப்ரஸ்தாவமே கிடையாது

### யுத்தகாண்டத்தில் பெருமாள் செய்தருளின பரிஷ்வங்கம்

1—15 *ஏஷ ஸர்வஸ்வபூதஸ் து பரிஷ்வங்கோ ஹநூமத:, மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ் தஸ்ய மஹாத்மந:*. [பெருமாள் திருவடியைத் தழுவியது]

41—1 *அத தஸ்மிந் நிமித்தாநி த்ருஷ்ட்வா லக்ஷ்மணபூர்வஜ:, ஸுக்ரீவம் ஸம்பரிஷ்வஜ்ய*. [பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜரைத் தழுவியது]

92—10 *உபவேச்ய ஸமுத்ஸங்கே பரிஷ்வஜ்யாவபீடிதம், ப்ராதரம் லக்ஷ்மணம்......* [பெருமாள் இளையோனைத் தழுவியது]

92—19 *ஸ தம் ப்ராதரமாச்வாஸ்ய பரிஷ்வஜ்ய ச ராகவ:. [இதுவுமது]

102—46 *ஏஹ்யேஹீத்யப்ரவீத் ராம: லக்ஷ்மணம் பரவீரஹா, ஸஸ்வஜே ஸ்நேஹகாடஞ்ச* [இதுவுமது]

115—6 *ரரகவ: பரமப்ரீத: ஸுக்ரீவம் பரிஷஸ்வஜே, பரிஷ்வஜ்ய ச ஸுக்ரீவம்......* [பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜரைத் தழுவியது]

130—40 *தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்த: சிரஸ்யாக்ஷிபதம் கதம், அங்கே பரத மாரோப்ய முதித: பரிஷஸ்வஜே* [பெருமாள் பரதாழ்வானைத் தழுவியது]

## யுத்தகாண்டத்தில்—பெருமாளுக்குக் கிடைத்த பரிஷ்வங்கம்

50—41 *தாவுத்தாப்ய மஹாவீர்யௌ கருடோ வாஸவோபமௌ, உபௌ தௌ ஸஸ்வஜே* [பெரிய திருவடி ராமலக்ஷ்மணர்களைத் தழுவியது]

50—55 *ஏவமுக்த்வா ததோ ராமம் ஸுபர்ணஸ்ஸுமஹாபல:, பரிஷ்வஜ்ய* (இதுவுமது)

172—12 *புத்ரம் தசரதஸ் தத:......பாஹுப்யாம் ஸம்பரிஷ்வஜ்ய* [ஸ்வர்க்கத்திலிருந்துவந்த தசரத சக்ரவர்த்தி பெருமாளைத் தழுவியது]

172—15 *த்வாம் து த்ருஷ்ட்வா குசலிநம் பரிஷ்வஜ்ய ஸலக்ஷ்மணம், அத்ய து:க்காத் விமுக்தோஸ்மி...* [சக்ரவர்த்தி இளையோனையும் சேர்த்துத் தழுவியது]

## உத்தரகாண்டம்

107—18 *அபிஷிக்தௌ ஸுதாவங்கே ப்ரதிஷ்டாப்ய புரே தத:, பரிஷ்வஜ்ய மஹாபாஹு: மூர்த்ந்யுபாக்ராய சாஸக்ருத்* [பெருமாள் குசலவர்களைத் தழுவியது...]

# யதீந்த்ரரும்-யதீந்த்ரப்ரவணரும்

நாளை ஐப்பசித் திருமூலத்தன்று விசேஷித்து அநுஸந்திக்க.

மணவாள மாமுனிகளுக்கு யதிவரபுநரவதார பூதரென்னும் ப்ரஸித்தி தொன்று தொட்டு விளங்கி வருகின்றது. எம்பெருமானாரே மீண்டும் மணவாள மாமுனிகளாகத் திருவவதரித்தருளின ரென்றபடி. இதற்குரிய உபபத்திகள் பலவுள. அவற்றை முன்னம் ச்லோக ரூபேண விஜ்ஞாபித்துப் பின்னை வியாக்கியானமிட்டு விளக்குகிறேன்.

(ச்லோ.) வ்யாக்க்யாநக்ரந்ததாநாத் பரிவதநகதாகந்தவைதேசிகத்வாத்,
நாநாசாஸ்த்ரார்த்தப்ருந்தப்ரசுரபணிதிபி: ப்ராஜ்ஞஹ்ருத்ரஞ்ஜகத்வாத்
பூர்வாசார்யோக்திராகாத் சடரிபுபு நிராட்ஸூக்திஸம்வர்த்தகத்வாத்
பீடாதீசப்ரதிஷ்டாபநக்ருதிகரணாத் திவ்யதேசாபிமாநாத் ||

பணிராஜாவதாரத்வாத் ஸ்ரீரங்கஸ்ரீவிவர்த்தநாத்.
யதீந்த்ரப்ரவணஸ் ஸாக்ஷாத் யதீந்த்ரோ பாஷ்யக்ருத் த்ருவம்.

## இதற்கு ஸங்க்ஷேபமான வியாக்கியானம் காண்மின்

1. வ்யாக்க்யாநக்ரந்த தாநாத். பெரும்பாலும் வியாக்கியானங்களருளிச் செய்வதிலேயே ஊக்கம் எம்பெருமானாருக்கும் மாமுனிகளுக்குமொக்கும்; ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபஸாரங்கள், கீதாபாஷ்யம் என்னுமிவை வியாக்கியான க்ரந்தங்களேயன்றோ! மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களும் ப்ரஸித்தங்கள். வேதார்த்த

ஸங்க்ரஹம், கத்யத்ரயம்—என்று சில மூலக்ரந்தங்களும் ஸ்வாமி ஸாதித்ததுபோலே மாமுனிகளும் யதிராஜ விம்சதி, உபதேச ரத்தினமாலை முதலிய மூலக்ரந்தங்களு மருளிச்செய்தது ப்ரஸித்தம்.

2. பரிவதநகதாகந்த வைதேசிகத்வாத். பரிவதநமாவது பரீவாதம்; நிந்தை யென்றபடி. அஸ்தாநே நிந்தாபரிஹாஸங்களை நிரப்பி நூல்களெழுதுவாருமுளரே; அங்ஙனம் நிந்தையையோ பரிஹாஸத்தையோ அணுவளவும் புகவிடாமல் பரமபவித்திர ஸ்ரீஸூக்திகளை யருளுந் தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

3. நாநா சாஸ்த்ரார்த்த ப்ருந்தப்ரசுரபணிதிபி: ப்ராஜ்ஞஹ்ருத் ரஞ்ஜகத்வாத் தொட்ட தொட்ட விடமெங்கும் பலபல சாஸ்த்ரார்த்தத் திரள்களே மலிந்த ஸ்ரீஸூக்திகளினாலே பண்டிதர்களின் உள்ளத்தை உகப்பிக்குந் தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

4. பூர்வாசார்யோக்திராகாத். எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் தொடங்கும்போதே "பகவத் போதாயந க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு: தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்றருளிச்செய்து பூர்வாசார்ய ஸூக்திகளில் தமக்குள்ள அபிநிவேசாதிசயத்தை விளங்கக் காட்டியருளினார். மாமுனிகளும் *முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு *முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம் *இத்யாதிகளாலே தமக்குள்ள பூர்வாசார்ய ஸூக்தி பஹுமானத்தைக் காட்டியருளினதோடு நில்லாமல், தம்முடைய வியாக்கியான க்ரந்தங்களைப் பூர்வாசார்ய ஸூக்திமயமாகவே அவதரிப்பித்தருளினார்.

5. சடரிபுமுநிராட்ஸூக்தி ஸம்வர்த்தகத்வாத். ஸ்வாமியின் வாழி திருநாமத்திலே மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே என்று ஓதா நின்றோம். *ஆய்ந்த பெருஞ் சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராத வுள்ளம் பெற—ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிவன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்* என்று அக்காலத்து சிஷ்யவர்க்கங்கள் பணிக்கக் காணாநின்றோம். இதுபற்றி மாமுனிகள் திறத்திலே சொல்லவேணுமோ? *சேற்றுக் கமலவயல் சூழரங்கர் தம் சீர்தனைப்பப் போற்றித்தொழு நல்ல வந்தணர்வாழ விப்பூதலத்தே, மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல், ஆற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே என்றவொரு பாசுரம் போதுமே.

6. பீடாதீசப்ரதிஷ்டாபநக்ருதி கரணாத். ஸ்வாமி எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது ஸுப்ரஸித்தம். *லக்ஷ்மீநாதாக்க்ய ஸிந்தெள சடரிபுஜலத:* இத்யாதி ச்லோகரத்னத்தினாலும் இது ஸுவ்யக்தம். மாமுனிகளும் "திரமாக திக்கஜங்களிட்டருளும் பெருமாள்" என்கிறபடியே அஷ்ட திக்கஜாசாரியர்களை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது நாடு நகரமும் நன்கறிந்தது.

7. திவ்யதேசாபிமாநாத். [இதற்கு இரண்டுவகையாகப் பொருள்] *மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்* என்றும், ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலெள......ஸ்ரீரங்கேசஜயத்வஜோ விஜயதே ராமாநு

